॥ श्रीः ॥

# श्री देवीनामस्तोत्रमञ्जरी

## प्रथमो भागः

## श्री देवीशत-सहस्रनामस्तोत्राणि

# ஸ்ரீ தேவீநாம ஸ்தோத்ர மஞ்ஜரீ

## முதல் பாகம்

## ஸ்ரீ தேவீசத-ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரங்கள்

ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதி ஜகத்குரு

ஸ்ரீ சங்கராசார்ய

ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்ரீ சரணர்களின்

பீடாரோஹண ஸ்வர்ண ஜயந்தீ மலராக

ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ சரணங்களில் ஸமர்ப்பிக்கப்பட்டது

வெளியிடுவோர் :

**ஸ்ரீ மஹாபெரியவாள் டிரஸ்ட்**

குரு கிருபா, 94, I.T.I. Layout, M.S.R.I.T. Post\

பங்களூர் - 560 054

சித்ரபானு - 2003

**Sri Devinama Stotra Manjari**

First Part

**SRI DEVI SATA - SAHASRANAMA STOTRAS**

First Edition : 2003 - 500 copies

*தொகுத்தளித்தவர் :*
*வைத்ய* **S.V. ராதாகிருஷ்ண சாஸ்திரி**
*ஸ்ரீரங்கம்*

*Published by :*

**SRI MAHA PERIYAVAL TRUST**
GURUKRIPA,
94. I.T.I. LAYOUT,
M S R I T,
BANGALORE - 560 054

*Copies available at :–*
**Smt. P. Vijaya,**
Door No. 11, Plot No. 7, Ganapathy Street,
St. Thomas Nagar, Madipakkam,
Chennai - 600 091

***Price*** **: Rs. 151/-**

Lasertypeset & Printed at :
**V.K.N. ENTERPRISES,**
8/1, Dr. Rangachari Road, Mylapore, Chennai-4
Phone : 2495 07 75

# विषयानुक्रमणिका

# தேவியின் நாமங்கள்

தேவீ நாமஸ்தோத்ர மஞ்ஜரி என்ற நூல் இருபாகங்களாக வெளிவருகிறது. முதல் பாகத்தில் மந்திர மஹார்ணவமும் சாக்தப்பிரமோதமும் தந்துள்ள சில சத-ஸஹஸ்ர நாமஸ்தோத்திரங்கள் இடம் பெறுகின்றன. இரண்டாம் பாகத்தில் அந்த நாமங்கள் அர்ச்சனை செய்வதற்கேற்றவாறு நான்காம் விபக்தியில் மாற்றப்பட்டு, 'நம:' சேர்த்துத் தரப்பட்டுள்ளன.

தசமஹாவித்யைகள் என்று மந்திர மஹார்ணவமும் சாக்தப்பிரமோதமும் சிறப்புமிக்க மந்திர - தந்திர - யந்திர - வழிபாட்டுமுறைகளை விளக்கியுள்ளன. காளீ, தாரா, ஷோடசீ, புவநேச்வரீ, திரிபுரபைரவி, ச்சின்ன மஸ்தா, தூமாவதீ, பகளா, மாதங்கீ, கமலா என்ற தேவியின் பத்து தோற்றங்களைப் பற்றியவை அவை.

பாமரனும் பண்டிதனும் இறை வழிபாட்டில் எளிய இரு முறைகளைப் பெரும்பாலும் பின்பற்றுகின்றனர். ஒன்று நாமங்களைக் கூறித்துதிப்பது. மற்றொன்று அந்த நாமங்களைக் கூறி அர்ச்சனை செய்வது. தேவியின் பெருமை வாக்கிற்கும் மனத்திற்கு எட்டாததொன்று. தேவியின் அருளால் தேவர், ருஷி போன்று முன்னோர் ஏதோ ஒருவகையில் தேவியை உணர்ந்தனர். தாம் உணர்ந்ததை விண்டு விளக்க முயன்று அதனை நாமத்துதி அளவில் வெளியிட்டனர். அவையே சத-ஸஹஸ்ரநாமங்கள்.

அவை நம் வரை கிட்டும்படி தேவி குருவடிவிலிருந்து நூல்வடிவிலும் உபதேசவடிவிலும் தந்துள்ளாள். தேவி உலகைத் தோற்றுவித்தாள். தன்மீது அதனை அமர்த்திக் கொண்டாள். அதன் உள்ளும் புறமும் நிற்கிறாள். அது தானே தன்னிலை இழக்காதபடி வளரச்சக்தி ஊட்டுகிறாள். அந்த சக்தியாக நின்று இயக்குகிறாள். அதனைச் சுற்றி நின்று காக்கிறாள். அதன் இயல்பான இயக்கத்திற்குத் தடையாக நிற்பவற்றை அழிக்கிறாள். வாழ்ந்து ப்யனற்றுத் தேய்ந்ததை

உருமாற்றுகிருள். தானும் பலவாருகத் தோன்றி உலக இயக்கத்தைத் தன் பேராளுமையால் சீராக அமைக்கிருள். இந்தப் பெருமைகளைச் சுட்டிக்காட்டுகிற ஆயிரக் கணக்கான திவ்யநாமங்களைத் தனக்கே உரித்தானவையாகக் கொள்கிருள். அந்தப் பெயர்களை விளையாட்டாகவோ நையாண்டியாகவோ நிந்தைச் சொற்களாகவோ சொன்ஞல் கூடப் பெருமிதம் கொண்டு பரிவுடன் நாமம் கூறியவனை அணுகுகிருள். தன்னைவிடத் தன் நாமம் சக்தி மிக்கதென்ற நம்பிக்கையைத் தருகிருள். ஒவ்வொரு நாமமும் அவளை மகிழ்விக்கின்ற துதி. ஒவ்வொன்றும் அவளது வடிவம். நாமத்தின் ஒவ்வோர் அக்ஷரமும் மந்திரம். அதன் ஓசையே தெய்விகஒலி.

துதி என்று தனித்தொன்றில்லை. நாமமே துதி. அதனைக் கேட்பது சிரவணம்; அதனைப்பாடுவது கீர்த்தனம்; நாமத்தின் பொருளான தேவியை நினைப்பது ஸ்மரணம் என்று நாமமே பக்தியின் முதல் மூன்று படிகளாகின்றது. பாதஸேவனம் அர்ச்சனம் வந்தனம் தாஸ்யம் ஸக்க்யம் ஆத்மநிவேதனம் என்ற மற்றமேல்படிகளில் ஏற்றிவிடுகிறது.

புராணங்களும் தந்திர நூல்களும் தந்த சத-ஸஹஸ்ரநாமத் தொகுப்புகள் எண்ணற்றவை. அவற்றில் சில இன்று வழக்கிலுள்ளன. 100 (சதம்) என்ருலே 108 தான். ஆயிரம் (ஸஹஸ்ரம்) என்ருலே 1008 தான். அஷ்டோத்தரம் என்றே சொல்வர். ஆலயவழிபாட்டில் இந்த 108-1008நாம அர்ச்சனை செய்யும் போது உள்ளத்தில் தேவியின் அருகாமையையும் அருளுருவத்தையும் உணர்ந்து பூ முதலானவற்றைத் தேவியின் திருவடி முன் வைக்கிரும். .அந்தப்பூவே அர்ச்சிப்பவனின் உடலும் உள்ளமும் ஆத்மாவுமாகும். உணர்வைச் செயல்வடிவில் வெளிப்படுத்துவது எளிதல்ல. எனினும் பல நாட்களின் தொடர்ந்த பழக்க வழக்கத்தால் உள் வாஸனையால் தேவியின் எதிரே தேவியின் திருவடிகளைப் பற்றி வணங்கிப் பூவால் அலங்கரிக்கிரும். அம்மா என்று சொல்லும் சொல்லில், கரிசனமும் பரிவும் மிக்க தாயுருவம் தெரியும். தன்

சிறுமையும் அவளது பெருமையும் துலங்க வணக்கத்துக்குரிய தாயைக் காணலாம். இந்த உணர்வே நாமாவளி கூறி நம: சொன்னதும் வெளிப்படும். தேவியின் அருளே இந்நிலையை உருவாக்கும். இந்நிலையே தேவியின் அருளைக் கனியச்செய்யும். அவள் அருளால் அவள்தாள் வணங்கி, அவ்வாறு வணங்குவதால் அவள் அருள்பெறுவர் என்ற சுழல்.

கிருஷ்ணா என்று அழைப்பவன் கிட்டா ! கிட்டு ! கிருட்டினா என்று சிதைத்தாலும் அதனைத் தன் நாமமாகக் கொள்வான் என்று ஆழ்ந்த நம்பிக்கை. அது ஸத்தியமான ஆதாரம் கொண்டதே. துதிக்கும் நிந்தைக்கும் அப்பாற்பட்ட இறைவன் அரைகுறைப்பெயரிலும் பெயரின் ஓர் எழுத்திலும் நிறைவை உணர்கிறுன். ஐ ஐ என்று பன்றியைக் கண்டு பயந்த சிசு உளறிற்று. அதுவே பழக்கமாகி எதைக் கண்டாலும் ஐ எனக் குதித்தது. மறுபிறவியில் அந்த சிசு ஐம் என்ற வாக்பவமந்திரத்தின் சித்தியை எளிதில் பெற்றதென்கிறுர் லகுபட்டாரகர் தனது லகுஸ்தவத்தில்.

விரும்பத்தகாத சூழ்நிலையைக் குறிக்க, ''ஹரோ ஹராதான்,'' ''கோவிந்தாவாகிவிட்டது'' சிவசிவா! கிருஷ்ண க்ருஷ்ணா ! என்று குறிப்பிடுவதுண்டு. இறைவன் பெயரின் தூய்மை இந்தத் தவருன சொல்லாட்சியால் மாசுபெறுவதில்லை. அதனையே உள்ளார்ந்த அன்புடன் கூறும்போது கவசமாகிக் காக்கிறது.

நாமங்களைக் கொண்டு பிறர் சார்பில் அர்ச்சிக்கும்போது இந்த பக்தி நிலை தேவை. தனக்காக அர்ச்சிப்பவர் பக்தி உணர்வற்று அர்ச்சனை செய்யும் போதும் ,தான் அர்ச்சகர் கூறுகிற நாமங்களின் வழியே பக்தியுடன் திருவடி சென்றடைந்து வணங்குவது எளிதானதே.

நூற்றி எட்டும் ஆயிரத் தெட்டும் முடிவில் பதினெட்டே. பதினெட்டு கடபயாதி முறையில் 'ஜய' ஆகும். நாமங்களால் துதிக்கப்பெறுபவளும் அர்ச்சிக்கப் பெறுபவளும் எங்கோ இல்லை. ''ஸர்வத: பாணிபாதம்''

''ஸர்வாந்தர:'' என்று உபநிடதம் அவளது காதுகளையும் திருவடிகளையும் திக் கெட்டிலும் காணலாம் என்கிறது. பூவும் குங்குமமும் வணங்குபவனின் பிரதிநிதியாகத் திருவடியைச் சென்றடைகின்றன.

வாயால் மட்டும் கூற வாய்மட்டும் பயன்பெறுகிறது. காதால்மட்டும் கேட்கக் காது பயன்பெறும். பூவைக் கைகளால் போடக் கை பயன்பெறலாம். அதனையே பக்தியால் உள்ளம் உணர்ந்த செயலாக்க உள்ளமும் ஆத்மாவும் மேன்மை பெறும். யாரோ ஒருவருக்காக யாரோ ஒருவர் அர்ச்சனைசெய்யும் போதும், நாம் தெய்வத்தின் திருவடிகளில் பக்தியுடன் ஒவ்வொரு நாமத்திற்கும் விழுந்தெழுவதாகப் பாவித்துக் கைகூப்பிக் கண்களில் நீர் பெருக, உள்ளமும் வாயும் தழ தழக்கத் தேவியின் முழுக்கோலத்தையும் உள்வாங்கிக் காண்பதும் பெரும்பாக்கியமே .அதுவே நாமங்களால் துதிப்பதற்கும் அர்ச்சனை செய்வதற்குமான உயர்நோக்கம்.

விஷ்ணு லலிதா முதலிய சில தெய்வங்களின் நாமங்களை வியாஸர் சங்கரர் பாஸ்கரராயர் முதலானோர் பல நூல்களின் விவரண உதவிகொண்டு உரை எழுதி நாமங்களைச் சிதைஉறாமல் காப்பாற்றித் தந்துள்ளனர். உரை எழுதப்பெறாத மேலும் சில தெய்வ நாமஸ்தோத்திரங்களும் வழக்கில் உபதேசக் கிரமமாக இன்று வரை தொடர்வதால் சிதைவு பெறவில்லை. நூல்களில் மட்டுமே காணப்பெற்று வழக்கிற்கு வராத நாமஸ்தோத்திரங்கள் உண்டு. அவற்றை நான்காம் வேற்றுமைக்கு மாற்றிய நாமாவளித் தொகுப்பு காணப்பெறவில்லை. மஹாவித்யை நாமஸ்தோத்திரங்களில் சில அத்தகையவை. இவற்றில் சில வங்கம் காச்மீரம் பஞ்சாப், அஸமம், உத்கலம் முதலிய பகுதிகளில குலவித்யையாக உபதேசிக்கப்படுபவை. தென்னாட்டில் இந்த உபதேசகிரமம் பெற்றவர் சிலரே. துர்க்கை, லக்ஷ்மீ, ஸரஸ்வதீ, பாலா, லலிதா என்ற தேவிகளின் வழிபாட்டுமுறை ஸ்மார்த்த முறையிலும் தந்திர முறையிலும் இங்கு தொடர்கிறது.

*தந்திர வழிபாட்டுமுறையறிந்தவர் தனக்குள்ள மொழியறிவின் துணையுடன் நாமாவளியாக்கும்போது தவருக நாமங்களைப் பிரிக்க நேரலாம். இன்று காளீ ஸஹஸ்ரநாமாவளியில் 1111 நாமங்கள் உள்ளன. சில பதிப்புகளில் 1129 நாமங்கள் உள்ளன. இவற்றை ஆயிரம் நாமங்களாகப் பிழையின்றி பிரிக்க முடியலாம். ஆயிரம் (ஸஹஸ்ரம்) நூறு (சதம்) என்று எண்ணுல் குறிப்பிடும் போது 1010ம் அல்ல 990ம் அல்ல; சரியே ஆயிரம் எனக் கொள்ளத்தகும் என்பதும் முறையல்ல என்பவரும் உண்டு. பெருமளவில் தோராயமாக ஆயிரம் அல்லது நூறை எட்டி நின்ருல் போதும் என்பதே அவர்கள் கருத்து. எனினும் சரியான நாமப்பிரிவு முறை அறிந்து நாமாவளி அமைத்தல் அவசியம். அதுவரை இருப்பதை இருக்குமளவில் காப்பாற்றுவோம்.*

*அர்ச்சனையில் மட்டுமின்றி நம: என்பதை ஸ்வாஹா என மாற்றி ஹோமம் செய்வதும் உண்டு. இரண்டாம் வேற்றுமையில் மாற்றி தர்பயாமி சேர்த்து தர்பணம் செய்பவரும் உண்டு. இவற்றிற்கு நாமாவளி தான் மூலம். மஹார்ணவத்திற்கும் சாக்த பிரமோதத்திற்கும் ருத்திரயாமளம் பிரும்ஹயாமளம் ஸ்காந்தபுராணம், பிரும் ஹாண்டபுராணம் முதலியவை மூலம். அவற்றிலும் பலபகுதிகள் வழக்கொழிந்துவிட்டதால் சரியானபாடம் கிடைப்பது அரிதாகியது.*

*குரு முகமாகவே இவற்றின் உபதேசம் பெற வேண்டுமென்பது பொது நியதி. தேவியையே குருவாக பாவித்து வணங்கி ஸ்தோத்திரம் படிப்பதும் வழக்கில் உள்ளது. தக்ஷிணா மூர்த்தி, ஹயக்ரீவர், ஸரஸ்வதி, துர்வாஸர் முதலிய ஆலயங்களிலுள்ள குருமூர்த்தங்களின் எதிரே அமர்ந்து வணங்கிப் படிக்க தொடங்குவது பெரியோர் காட்டிய வழி.*

*தமிழ் நாட்டில் தச மஹா வித்யைகளின் நாமஸ்தோத்திரத்தையோ நாமாவளியையோ கூறுபவர் விரலிட்டு எண்ணக் கூடியவரே. இவற்றை இங்கு*

தொகுத்தளிப்பவருக்கும் அவ்வாறு செய்யத் தூண்டியவருக்கும் இதற்கு உதவுபவருக்கும் நோக்கம் ஒன்றே. பாரதீயப்பண்பாட்டின் பெரும்பகுதி சென்றதலைமுறை வரை தொடர்ந்து முன்னோரின் பகீரதப்பிரயத்தினதால் பெருத்த கலவரச் சூழ்நிலையிலும் சிதைவுறாமல் பாதுகாக்கப்பெற்று நூல்கள் வடிவிலும் உபதேசவழியிலும் வழங்கப்பட்டுவந்துள்ளது.

நாம் அதனை உரிய முறையில் பாதுகாத்து நம் ஸந்ததியினருக்கு அளிக்கும் தகுதியை இழந்து விட்டோம். இன்று மஹார்ணவத்தையோ சாக்த பிரமோதத்தையோ பொருள் விளக்கிப்போதிப்பவர் இல்லை. இதன் விளைவாக பல ஸஹஸ்ரநாமத்துதிகள் நூல்வடிவில் மட்டும் கிடைக்கின்றன. வழக்கில் அவை இல்லை. பின்வரும் சந்ததியினர் நம்மை விடச் சிரத்தையும் அறிவும் மிக்கவராகத் தோன்றத் தேவி அருள்வாள். அவர்களிடம் மூலநூல்களின் சில பகுதிகளையாவது வழங்கி, நம்முன்னோருக்கு நன்றி தெரிவிப்பதொன்றே இந்தவெளியீட்டின் நோக்கம். பெரும் தந்திர நூல்களினிடையே பொதிந்துள்ளவற்றைப் பொறுக்கி எடுத்து எமது அறிவுகொண்டு தூசு தட்டி வரும் ஸந்ததியினரின் முன்வைக்கிறோம். இச்செயலில் நேர்கிற தவறுகளைத் தேவி பொறுத்துக்கொள்வாள். தவறுகளைத்திருத்தி நல்வழிகாட்ட நல்ல குருவரர்களை அளிப்பாள். தாயின் கடமை அது.

தச மஹா வித்யைகளின் துதிகளுடன் துர்க்கை ஸரஸ்வதி பாலா காமாக்ஷி என்ற நான்கு தேவியின் தோற்றங்களின் துதிகளும் இணைக்கப்பெற்றுள்ளன. தாரா மாதங்கி இருவரின் ஸௌம்ய உருவகம் ஸரஸ்வதியாவாள். காளியும் திரிபுரபைரவியும் இணைந்த ஸௌம்ய வடிவம் துர்க்கை. கமலா லக்ஷ்மியாகி விட்டாள். மஹா ஷோடசியின் லகுவடிவம் பாலா. பாலாவின் அருளின்றி பஞ்சதசாக்ஷரீ, ஷோடசீ என்ற நிலைகளைக் காண இயலாது. குட்டி லலிதை என்றே பாலா லலிதோபாக்கியானத்தில் அறிமுகப்படுத்தப்படுகிறாள். காமாக்ஷி எல்லா தேவிகளின்

ஸமஷ்டியான அருள் வடிவம். ஆக இந்தத் தொகுப்பு பலரது அருள் வேட்கையை நிறைவு செய்யக் கூடும் .ஷோடசியின் நாமங்களை ஆம்நாயஸ்தவம் திரிபுராஸ்தவ ராஜம் இவற்றுடன் சேர்த்தே படிப்பது மரபு. அதனால் ஆம்நாயஸ்தவமும் திரிபுராஸ்தவராஜமும் இங்கு இடம் பெறுகின்றன. இது ஒரு' நல்ல நாமபாராயண நூலாக விளங்கத் தேவி அருள்புரிவாள்.

ஸ்மார்த்த ஆசாரம் என்ற ஸமயாசாரம் தேவியை ஸகுணமூர்த்தியாக உள்ளத்தினுள் வழிபடும் முறை. வெளிப்படையான வழிபாட்டு முறை குலாசாரம் என்ற தாந்திரிகமுறை. ஸ்மார்த்த முறையிலும் குலா சாரமுறையிலும் தேவியிடம் தேவியளித்ததனைத்தையும் ''தான்'' ''தனது'' என்ற பிடிப்பைவிட்டு அவளுடையதை அவளுடையதாக உணர்ந்த நிறைவுடன் ஸமர்பிப்பதே நோக்கம் .தேவியிடம் ஸௌம்ய நிலை க்ரூரநிலை என்ற வேற்றுமை இல்லை.

காளியைப் பெற்ற தாயைவிட இனியவளாக ஸ்ரீராம கிருஷ்ணர் போன்ற பல மகான்கள் கண்டனர். தேனும் பாலும் தேவி நமக்குத் தந்த பொருள்களின் பிரதிநிதி எனக் கொள்பவர் உண்டு. பிராணிகளின் மாம்ஸம், ரத்தம், மதுவினம், சுருட்டு என்று படைத்து தேவியின் திருப்தியைக் கோருபவர் உண்டு. அவரவர் தம் தமது உணவுப்பொருள் முதலியவற்றைத் தேவிக்கு முதலில் ஸமர்ப்பித்துப்பின் பிரஸாதமாக அதனை ஏற்பது தான் இதன் உட்கருத்து. பண்டனையும் சும்பனையும் சண்ட முண்டர்களையும் அழிக்கவந்த தேவியும் ஹிரண்ய கசிபுவை அழிக்க வந்த நரஸிம்ஹரும் பானகத்திலும் பாயஸத்திலும் நெகிழ்பவரே.

# தச மஹாவித்யைகள்

**काली तारा महाविद्या षोडशी भुवनेश्वरी ।**
**भैरवी छिन्नमस्ता च विद्या धूमावती तथा ।।**
**बगला सिद्धविद्या च मातङ्गी कमलात्मिका ।।**

காளீ, தாரா, ஷோடசீ, புவநேச்வரீ, பைரவீ, ச்சின்னமஸ்தா, தூமாவதீ, பகளா, மாதங்கீ, கமலா என 10 வித்யைகள். தெய்வத்தை உணர்த்துகிற அக்ஷரரூபமான மந்திரம் வித்யை எனப்படும். அந்த அக்ஷரராசியால் உணர்த்தப்படுகிற தெய்வமும் வித்யையே. தெய்வம் பெண்ணுனல் அதன் மந்திரத்தை வித்யை- என்பர். ஷோடசீ பஞ்சதசீ முதலிய மந்திரங்களை ஸ்ரீ வித்யை - சிறப்பு மிக்க வித்யை என்று கூறுவர். இந்தப்பத்தில் நடுவிலுள்ள ஷோடசீ ஸ்ரீ வித்யை எனப்படும். காளீ வித்யை, தாராவித்யை என்றவாறு மற்றவை குறிப்பிடப்பெறும். இவற்றுள் சிறந்தது ஷோடசீ வித்யை எனும் ஸ்ரீ வித்யை. முதலாவதாக காளீவித்யை குறிப்பிடப் பெறுவதால் ஆத்யா. ப்ரதமா என்ற சிறப்புப்பெயர் அதற்கு உண்டு.

காலம் என்பது காப்பு படைப்பு லயம் என்ற மூன்றுக்கும் உதவுகிற பெரும் தத்துவம். உலகின் மூல தத்துவங்களில் முக்கியமானது. காலத்தைத் தோற்றுவிப்பது மாயா சக்தியின் துணை கொண்ட பரம் பொருளே. பிரகாசநிலையிலிருந்து விமர்ச நிலைக்கு வர உதவுவது காலமே. விமர்சமும் வித்யை அவித்யை என்று நிலைவிரிவிற்கு உட்பட உதவுவதும் காலமே. மழையும் காற்றும் தட்பமும் வெப்பமும் மற்றதும் கால வேறுபாட்டின் விளைவே. தோற்றம் இருக்கை வளர்ச்சி முதிர்ச்சி தேய்தல் மறைதல் என்று ஆறுபாவுங்களும் காலத்தால் நேர்கின்றன. பரம்பொருள் காலத்திற்கு அப்பாற்பட்டமுன் நிலையில் தான் ஈசுவரனுகி உலகத்தின் மூலகாரணமாகிருர். **स पूर्वेषामपि गुरुः कालेनानवच्छेदात्** என்று யோகஸூத்ரம் இதனை விளக்கும். அதனுல் அவரை மஹாகாலர் என்பர். அவரது சக்தியே காளீ.

காலத்தைக் கடந்த காலாதீதப் பொருள். மஹாகாலர் மஹாகால சக்தியின் உதவியால் உலகைப்படைக்கிறர். இந்த சக்தியின் துணையின்றி அவர் செயல்படமுடியாது. शिवः शक्त्या युक्तो यदि भवति शक्तः प्रभवितुम् । அதனுல் சக்தி சிவனிடமிருந்து பிரிந்து ஆதியில் செயல்படும் போது சவமாகிய சிவன் அவளைத்தாங்க, இயக்கவேகத்தில் கொடுமை நிரம்பிய வளாக விமர்சநிலையின் செம்மை இறுக்கம் பெற்று கருத்தவளாகக் காட்சி தருகிறுள்.

படைப்பின் முன் நிலை அழிப்புதான். புதிதாக எதுவும் படைக்கப்படுவதில்லை. இருப்பதின் உருமாற்றமே அழிப்பும் படைப்பும்

தன்னுள் உலகை மறைத்துக் கொண்ட (திரோதான கரீ ஈச்வரீ.ல.ஸ) தேவி கால வரைக்கும் தேசவரைக்கும் உட்படாதவள். தேசவரைக்கு உட்பட்டதைத்தான் ஆடை மறைக்கும். அழகுபடுத்தும். தேசவரைக்கு அப்பாற்பட்ட தேவிக்கு ஆடையாக மறைக்க எதுவுமில்லை. அதனுல் அவள் திகம்பரா, நக்நா. திசைகளையே ஆடையாகக் கொண்டு அம்மணமாக நிற்கிறுள். எல்லாமாக இருந்தது பிரளயத்தில் ஒன்றுனது. அந்த ஒன்று பெருவெளி என்ற நிலைக்கு வந்து பராகாசமாக ஆகாசமாக மாறியது. அதுவே பரம்பொருள் நிலைக்கு முதல் மறைப்பு எனும் திரோதான மாகும். அந்நிலையில் சிவனை அம்பர (ஆகாசம்) வாணன் என்பர். ''ஆகாச சரீரம் ப்ரம்ஹ'' என உபநிடதம் கூறும். சரீரம் என்பதே கோசம் தானே ! அந்த அம்பரம் உலகமாக மாறப் பெறுகிற முதல் நிலை திக்குகளாகும். அம்பலவாணனே திகம்பரனுகிறுன். சக்தி சிவனிடமிருந்து பிரிந்து விமர்சநிலையில் வரும்போதும் உணர்பவர் தனித்தில்லாததால் பேரிருள். உணர்பவர் தோன்றியதும் முதல் தோற்றம் செம்மை கலந்த கருமை. அதன் விரிவு செம்மை

முன்னர் உருப்பெற்றிருந்ததால் உலகம் காட்சிப்பொருளானது. காட்சிப்பொருளானதால் தான்

லோகம் என்று பெயர் பெற்றது. காட்சிப் பொருளாக உருப்பெற்றதை உருவிழக்கச்செய்ய அதனை விரட்டிக் கட்டுப்படுத்தி உருவிழக்கும் நிலைக்குக் கொண்டு செல்வதே காலனம். மஹாகாலரும் காளியும் இதனைச் செய்கின்றனர். இதனால் இவர்களை ஸம்ஹாரிணீ ருத்ரரூபா என்று லலிதா ஸஹஸ்ர நாமம் விளக்கும். காலோஸ்மி லோகக்ஷய க்ருத் ப்ரவ்ருத்த: என்று கண்ணன் கீதையில் தனது மஹாகாலவடிவை விளக்குகிறார். உருமாற்றியதையே உருப்பெறச் செய்யவும், உருப்பெற்றதைக் காக்கவும், அதே கால சக்தி தான் உதவுகிறது. உருமாற்றத்திற்கான இயக்கத்தில் குரூர சக்தியாகத் தோன்றிய உருவம், உருப்பெறவும் காக்கவும் உதவும் போது ஜகத்ஜனனியென்றும் ஜகத்தாத்ரியென்றும் பவதாரிணீ என்றும் மென்மை மிக்கதான தாய்வடிவில் தோன்றுகிறாள்.

பிரளயம் நேர்வதும் படைப்பின் முன் நிலையும் லோகத்தின் காட்சி உணர்விற்கு உட்பட்டதல்ல. அதனால் பேரிருள் சூழ்ந்த நிலை. ச்மசானம் போன்றது. உயிரினம் உருமாறுமிடம் ச்மசானம். சவமாகி மண்ணோடு மண்ணாகித் தன் தனித் தன்மை இழந்ததை, உயிரினம் உணராததைப் பேரிருள் உணர்த்துகிறது. மறுபடி சவநிலைபெற்று அதனுள் உயிர் நுழைந்து உயிரினமாகிறது. அன்றுடப்பிரளயத்திற்குப் பிறகு ஸூரிய உதயத்திலுள்ள செம்மை. அது பல நிறக்கலவையாக சில நொடிகள் விரிந்து பின்னர் பேரொளியாகத் தன்னை முதலில் விளக்கிக் கொண்டு மற்றதைத் தனித்திருப்பவையாக உணர்த்துகிற ஒளியாகிறது.

பிரளய நிலையின் முன் நிலையிலும் பிரளய நிலையிலும் படைப்பின் முன் நிலையிலும் பேரிருளாக இருந்த காளி தாரையாக, தாயான புவனஸுந்தரியான ஷோடசியாக, உலகைக்காக்கின்ற புவனேச்வரியாக லீலைகாட்டுகிறாள்.

ஸம்ஹாரத்திலும் உருவிழக்கச் செய்வதிலும் தனிமை இழந்து பெருநிலை பெறச் செய்வதிலும் வெளியே கொடுமையும் உள்ளத்தில் மென்மையும் கருணையும் உதவும்.

தட்டான் வளையாயிருந்த தங்கத்தை அழித்துப் புது நகையாக ஒளிரச் செய்வதில் வெளியே கொடூரமும் உள்ளே உருப்பெறச்செய்வதிலுள்ள மென்மையும் புலப்படுகிற தல்லவா ? காளியிடமும் கத்திரியும் கத்தியும் கொடூரத்தைக்காட்டும் போதே வர-அபயமுத்திரையும் கைகளிலுள்ளதை உணரவேண்டும். நம்மிடமுள்ள ஏழ்மையையும் துன்பத்தையும் அகற்றும் போதும் கொடூரம் உண்டு. ஆனால் உடன் இன்பம் தரவிருப்பதால் கொடூரம் உணரப்படுவதில்லை.

दारिद्र्यदुःखभयहारिणि का त्वदन्या
सर्वोपकारकरणाय सदाऽऽर्द्रचित्ता

என்று ஸப்தசதீ இதனை விளக்கும்

एकैव माया परमेश्वरस्य
स्वकार्यभेदात्प्रथते चतुर्धा।
भोगे भवानी समरे च दुर्गा
क्रोधे च काली पुरुषे च विष्णुः ॥

உலகத்தைக் காப்பதில் பரம்பொருளின் சக்தி பல நிலைகளைக்கொள்கிறது. அந்நிலைகள் ஒரே சக்தியின் மாயைவிளைவுகளே.

லகுஸ்தவம் எழுதிய லகுபட்டாரகர் (இவர் காளிதாஸரே என்பர்) உலகத்திற்கு உதவுவதற்காக தேவி பல உருவங்களை ஏற்றுத் தன் எல்லையற்ற பெருமையைக் குறிப்பிட்ட செயலுக்கேற்ற குறுகிய வடிவில் வெளிப்படுத்தி உதவுவதைப் பாராட்டுகிறார்.

लक्ष्मीं राजकुले, जयां रणभुवि, क्षेमंकरीमध्वनि
क्रव्याद‌द्विपसर्पभाजि शबरीं कान्तारदुर्गे गिरौ।
भूतप्रेतपिशाचराक्षसभये स्मृत्वा महाभैरवीं
व्यामोहे त्रिपुरां तरन्ति विपदः तारां च तोयप्लवे ॥

ஸர்வோபகார கரணாய ஸதார்த்ர சித்தா என்று எல்லா நிலையிலும் எல்லோருக்கும் எல்லா வகையிலும் உதவுவதற்கு எப்போதும் கனிந்த உள்ளத்துடன் தேவி உள்ளாள் என்பது பக்தர்களின் அனுபவம்.

அரசரது அரண்மனையில் அவள் லக்ஷ்மீ. (அவள் உள்ள இடம் அரண்மனையாகும்). போர்க்களத்தில் வெற்றிதேவதையான ஜயா. வழியில் மார்க்கஸஹாயா - வழித்துணையான க்ஷேமங்கரி - நன்மைபுரிபவள். கொடும் வனவிலங்கும் பாம்பும் உலவுகிற அடர்ந்த காட்டிலும் மலையிலும் அவள் சபரீ(வேட்டுவப்பெண்). பூதம் பிரேதம் பிசாசம் ராக்ஷஸர் என மறைந்து தாக்குபவரின் முன் அவள் பைரவி. அறிவிழந்த நிலையில் திரிபுர ஸுந்தரி, வெள்ளப்பாதிப்பில் தாரை அவள். துன்பமிக்க நெருக்கடியைக் கடக்க தேவி பலவாறு உதவுவாள்

**பரா சக்தியான தேவி :-** நெருக்கடி நேர்கிற போது பல வடிவங்களை எடுத்து வெளிப்படுகிறாள். அவற்றில் சில உக்ரசக்தியை வெளிப்படுத்துபவை. ஆனால் அவை வெளிப்படையான உக்கிரத்திற்கு நேர் எதிரான மென்மையும் கருணையும் உள்ளத்தில் கொண்டவை. சில மென்மையான தோற்றம் கொண்டவை. வெளிப்படையாகத் தெரிகிற மென்மைக்கு நேர் எதிரான உக்கிரத்தை அது வெளிப்படுத்தவும் கூடும்.

தக்ஷர் தன் தற்பெருமை வெளிப்படுவதற்காக வேள்வி ஒன்றைத் தொடங்குகிறார். அவர் மக்கள் தலைவர்களான பிரஜாபதிகளுக்கும் தலைவர். உலகில் உள்ள பெரியோர் அனைவரையும் வேள்விக்கு அழைத்த அவர் தன் அரும் புதல்வி ஸதியின் கணவராகிய சிவபெருமானை அழைக்கவில்லை. சிவபெருமான் தன்னை மாமனார் என்ற தகுதிக்கு ஏற்ப மதிக்கவில்லை என்ற மனத்தாங்கலின் விளைவு இது. காதுவழியே வந்த செய்தியை ஒட்டி ஸதி ஆர்வத்துடன் தன் தந்தையின் வேள்வியில் பங்கு கொள்ளக் கணவரிடம்

அனுமதி கோருகிறாள். தன்னை மதியாத - தன்னை அழைக்காத தக்ஷன் வேள்விக்குச் செல்ல அனுமதிக்கச் சிவபெருமான் மறுத்தபோது, சிவனிடம் தக்ஷனின் நடைமுறை பற்றி உள்ளடங்கியிருந்த தாபம் ஸதீ தேவியின் உடலில் பற்றிக்கொள்ள, தேவி சிவபெருமானை உற்று நோக்குபவளாக கோபத்தழல் மூண்டு சிவந்து, வேள்வியில் பங்கு கொண்டு தன்கணவருக்குரிய வேள்வியின் பங்குரிமையைப் பெற்று வருவதாகவும், அவ்வெண்ணம் நிறைவேறுவிடில் யோகாக்னியால் தன்னை எரித்து வேள்வியையும் அழித்துவிடுவதாகவும் சூளுரைத்தாள். கோபத்தீ தீவிரமடைய தேவியின் மேனி கறுத்து மேலும் பயங்கரமாகியது. அத்தோற்றத்தைக் காணக்கூசி சிவன் அவ்விடமிருந்து அகன்றதும். அவரைத் தடுக்கத் தேவி பத்துதிக்குகளிலும் பத்து வடிவங்கள் ஏற்றுச் சூழ்ந்து நின்றாள். அவ்வடிவங்களே காளீ, தாரா, ச்சிந்நமஸ்தா, புவநேச்வரீ, பகளாமுகீ, தூமாவதீ த்ரிபுரஸுந்தரீ (ஷோடசீ) திரிபுரபைரவீ, மாதங்கீ, கமலா என்று பின்னர் வழிபடப்பெறுகின்றன.

கோபத்தால் சிவந்த நிலையை விளக்குபவை புவனேச்வரீ, திரிபுரஸுந்தரீ எனும் ஷோடசீ, திரிபுரபைரவீ, மாதங்கீ, கமலா எனும் ஐந்து. கோபத்தால் சிவந்து கறுத்த வடிவங்கள் காளீ, தாரா, ச்சின்னமஸ்தா, பகளாமுகீ, தூமாவதீ எனும் ஐந்து என்பர்.

சிவபெருமான் தன்னைச் சூழ்ந்து நிற்கிற தேவியின் தோற்றங்களைத் தனக்கு விளக்கவேண்ட, தேவி இவ்வாறு விளக்கியதாகப் புராணம் கூறும்.

येयं ते पुरतः कृष्णा सा काली भीमलोचना।
श्यामवर्णा च या देवी स्वयमूर्ध्वं व्यवस्थिता॥

सेयं तारा महाविद्या महाकालस्वरूपिणी।
सव्येतरेयं या देवी विशीर्षातिभयप्रदा॥

इयं देवी छिन्नमस्ता महाविद्या महामते ।
वामे तवेयं या देवी सा शंभो भुवनेश्वरी ॥

पृष्ठतस्तव या देवी बगला शत्रुसूदनी ।
वह्निकोणे तवेयं या विधवारूपधारिणी ॥

सेयं धूमावती देवी महाविद्या महेश्वरी ।
नैरृत्यां तव या देवी सेयं त्रिपुरभैरवी

वायौ या ते महाविद्या सेयं मतङ्गकन्यका ।
ऐशान्यां षोडशी देवी महाविद्या महेश्वरी ॥

अहं तु भैरवी भीमा शंभो मा त्वं भयं कुरु ।
एताः सर्वाः प्रकृष्टास्तु मूर्तयो बहुमूर्तिषु ॥

''பெருமானே ! தங்களுக்கு எதிரில் கருத்தமேனியுடன் கொடூரப்பார்வையுடன் உள்ளவள் காளி. மேகநிறம் கொண்டு வானில் நிற்பவள் தாரா. வலப்புறத்தில் தலையின்றி நிற்பவள் ச்சின்ன மஸ்தா, இடப்புறத்தில் புவனேச்வரீ, தென் கிழக்கில் விதவைக் கோலத்தில் தூமாவதீ, தென்மேற்கில் திரிபுரபைரவீ, வடமேற்கில் மாதங்கீ, வடகிழக்கில் ஷோடசீ. நான் இவற்றின் மூலமான பைரவீ. இவர்கள் எனது சிறந்ததோற்றங்கள்'' என்பாள்.

கோபத்தால் சிவந்து கறுத்தமேனி கொண்டகாளியே மற்ற ஒன்பது வடிவங்களைப் பெற்றுள் என்பர். இவர்களைப்பற்றிய சிறுவிளக்கம் பின்வருமாறு

1. காளீ- துர்க்கா ஸப்த சதியில் உள்ள வரலாறு- சும்பனையும் நிசும்பனையும் அழிக்கத் தேவர்கள் வேண்டிய போது கங்கையில் நீராடவந்த பார்வதியின் சரீரத்திலிருந்த கௌசிகீ வெளியாகி அப்பால் நிற்க, பார்வதி கருநிறத்துடன் காளியாகிறாள். இவளைக் கண்ட சண்டனும் முண்டனும் தலைவர்களான சும்பனுக்கும் நிசும்பனுக்கும் ஏற்றவள் இவள்

என்று கருதி தலைவர்களிடம் சென்று தெரிவிக்கப்பின் சும்ப நிசும்பர்களுக்கும் தேவிக்கும் இடையே போர் மூண்டு இரு அசுரர்களையும் தேவி அழிக்கிறாள்.

இவள் சவத்தின் மீதமர்ந்தவள். சக்தி உடலைவிட்டுப் பிரிந்து தனித்ததும் மீதமுள்ள உடல் சவமாகிறது. சவமும் சக்தியும் பிரிந்த நிலையில் உள்ள தோற்றம் இது. சக்தியை விட்டுப் பிரிந்த உலகம் சவமே. அட்டஹாஸச்சிரிப்பு அவளது வெற்றித்திமிரின் வெளிப்பாடு.

உலகத்தின் உற்பத்தியும் காப்பும் பகலில் நடைபெறுகிறது. உலகை இரவில் தன்னுள் ஒடுக்கிக் கொள்கிறாள். மஹாகாலராகிய பிரளயருத்திரரின் சக்தி இவள். பிரளயத்தில் விச்வம் எனும் உலகம் சவமாகி அவளது அடியில் பதிகிறது. உலகின் உருமாற்றம் நிகழுமுன் மூலப்பொருள் நிலைக்குமாற்றம் நிகழ்ந்து உலகிற்கு ஓய்வு தரப்படுகிறது. உருவாக்குகிற பிரகிருதியும் உருவாகிற புருஷனும் ஓய்வு நிலையில், தனியே உணரமுடியாத தமோநிலை. எவ்விதக்குறிப்பீடுமில்லை. ஊஹிக்கவோ இது அது என உணர்த்தவோ இயலாதநிலை. கருப்பும் இருட்டும் உணரமுடியாத நிலையும் ஒன்றே. அவளே காளீ என்ற பரா சக்தி.

இவள் உலகின் மூலகாரணமாக அந்தப் பிரளய இரவின் இறுதியில் தன்னைவெளிப்படுத்திக் கொள்கிறாள். கருமையின் ஆழமும் ப்ரப்பும் எல்லையற்ற நிலையில் உள்ளதாக முதலில் வெளியான நிலை. ''தமஸே முதலில் வெளியானது. மறைந்திருந்தபொருளை உலகின் மூலப்பொருளாகக் காட்டியது'' என்று கூறுகிற நாஸதீய ஸூக்தத்தில் இதன் விளக்கம் காணலாம். விடிவெள்ளியும் இளம் சூரியனின் செங்கதிரும் இரவின் இருளுமாக முக்குணங்களாகப் பிரிந்தும் பிரியாமலுமிருக்கிற நிலை. அதனால் இவளை ''ஆத்யா'' ''பிரதமா'' என்று கூறுவர்.

உலகின் மூலகாரணமாகத் தோன்றுகிறநிலையை நிதானம் - ஸங்கேதம் என்பர். இதுவரை பரவெளியான

பரமாகாசம் முழுதுமாயிருந்தது, நான்கு திசைகளான எல்லைக்குள் அடங்கியது. அந்த பரந்த தேசஎல்லை முழுவதையும் தன் பரப்பில் அடக்க ஸ்வஸ்திகமாக நான்கு கைகள் விரிகின்றன. எட்டுகைகளும் பத்து கைகளும் பதினாறு கைகளும் என திக்கின் எல்லை விரிவிற்கேற்ப காளியின் கைகளின் எண்ணிக்கையும் கூடும். கத்திரி, கோடரி கத்தி என்று வெட்டிப் பிரிக்கின்ற ஆயுதங்களும் பிரிபட்டதலைமுண்டம் முதலானதும் அவளது கைகளில் விளங்கும். உலகின் படைப்பு லீலையாகவே நிகழ்வதால் சிரிப்பும் குதிப்பும் கும்மாளமும் அட்டஹாஸமும் நாக்கு வெளியிடுதலும் ஆடையற்ற நிலையும் தெற்றிப்பல்லும் தோற்றச் சிறப்புகளாகின்றன, இறுதியை ஒட்டிப்படைப்பு நிகழ்வதால் ச்மசானத்தில் வாஸம். இனி உலகமாகக் காட்சிதரவிருக்கிற பிரகிருதிக்கு ஆறுதலும் கருணையும் காட்ட அபயவரத முத்திரை.

பத்ரம் கர்ணேபி: என்று தொடங்குகிற வேதத்தின் சாந்தி மந்திரத்தில் இந்திரன், பூஷா, தார்க்ஷ்யர், பிருஹஸ்பதி என்ற நான்கு தேவர்கள் ஸ்வஸ்தியை (மங்களத்தை) த்தரும்படி வேண்டப்படுகின்றனர். வானமண்டலத்தை நான்கு பகுதிகளாக 90 அம்சங்கள் கொண்டதாகப்பிரிப்பர். கோளத்தின் விரிவு 360 அம்சங்கள் (டிகிரிகள்). 27 நட்சத்திரங்கள் இவற்றை 27 ஆகப் பிரிக்கின்றன. சித்திரை இந்திரனது ஆளுகைக்குட்பட்டது. ரேவதீ பூஷாவிடமும் திருவோணம் தார்க்ஷ்யரிடமும் பூசம் பிருஹஸ்பதியிடமும் அடங்கியது. நக்ஷத்ரமண்டலத்தை வானப்பரப்பில் விரித்தால் நான்கு கைகள் போலத் தோன்றும். இறைவன் அல்லது இறைவியின் உருவகத்தில் நான்கு கைகள் என்ற உருவகத்தை அந்த சாந்தி மந்திரம் விளக்கும். காளியும் வான மண்டலமாகிய பராகாசம் முழுதும் பரவியவள்.

மஹாகாலர் விசுவாதீதர் எனப்படுவார். விசுவமாகிய உலகம் அனைத்தும் காலத்தினுள் அடங்கியது மஹாகாலசத்தியே மஹாகாளி. அந்நிலையில் ஆண் பெண், வயதாலான பாலா- விருத்தா என்று எந்த

வேறுபாடுமற்றநிலே. அவளுக்குள் பல உலகங்கள் தோன்றி மறைகின்றன. அதனுல் மறைந்த உலகின் அடையாளமான முண்டங்கள் மாலேயாகத் தொங்குகின்றன. மறைப்பதற்கு உரிய கட்டுப்பாட்டிற்கு உட்படாத நிலேயானதால் ஆடையற்றவளாக திக்குகளேயே ஆடையாகக் கொண்டவளாக விராட்சக்தியாக திகம்பரா, நக்நா என்று குறிப்பிடப்பெறுகிருள். காளீ கருத்தவள், விரட்டுபவள், தூண்டுபவள்.

தக்ஷிண காளீ, பத்ரகாளீ, ச்மசானகாளீ சியாமா என்ற பல தோற்றங்களில் காளீ வழிபடப் பெறுகிருள். இவள் மஹாசீனக்கிரமம் என்ற பௌத்தர்களில் வழிபாட்டு முறைகளேக் கொண்டு வழிபடப் பெறுகிருள். புத்தரின் வழிவந்தவர்களில் பலர் சாக்தர்கள். திபேத் சீனுமுதலிய நாடுகளில் இவர்கள் பரவி புத்தமதத்தைப் பரப்பினர். அதற்குச் சக்தி வழிபாடு பெரிதும் உதவியது. அதில் கைதேர்ந்த ஸாதகர்கள் சக்தி வழிபாட்டை முறைப்படுத்தினர். பாரதத்தில் சக்திவழிபாடு தொய்வு நிலேக்கு வந்த இடங்களில் இந்த பௌத்த (மஹாசீன) வழிபாட்டுமுறையே சக்தி வழிபாட்டில் இடம் பெற்றது. மஹா சீனக்ரமாராதனே பற்றிய குறிப்பு தேவிநாமங்களிலும் உச்சிஷ்டகணபதி நாமங்களிலும் பல இடங்களில் இடம்பெற்றிருப்பதைக் காணலாம். பாரதத்திலிருந்து சீனம் வரை சென்று மறுபடி தாய்நாட்டிற்கு வந்ததே மஹாசீனக்ரமம் என்பர்.

தேவியின் வழிபாட்டுமுறையில் தொய்வு ஏற்பட்ட நிலேயில் ஸமயாசாரமுறையின் ஆதிகுருவாகிய வஸிஷ்டரே மஹாசீனத்தில் வாழ்ந்தபௌத்தர்களின் தெளிந்த வழிபாட்டு முறையை ஸாதகர்கள் கற்று வர வழிகாட்டினுர் என்று தந்திர நூல்கள் கூறும்.

**2. தாரா :–** தாரா, உக்ரதாரா, ஏக ஜடா, நீலஸரஸ்வதீ, வாகீச்வரீ, ஸரஸ்வதீ, காத்யாயனீ என்ற பல மந்திர சக்திமிக்க தோற்றங்களில் இவள் வழிபடப்பெறுகிருள்.

பௌத்தர்களின் மஹாசீனக்கிரமப்படி மைதிலர்கள் வழிபடுகின்றனர். அந்தணர்கள் காயத்ரியுடன் இவளது மந்திரங்களிலும் தீக்ஷை பெறுவது மைதிலர்களிடையே பரவி நிற்கிறது. குலதெய்வமாக வழிபடுபவர் பலர். வாக் சக்தி, மேதா சக்தி, ஸபையில் எதிர்த்து வாதாடுபவரை அடக்குகிற சக்தி என்று வழிபாட்டிற்குப் பல நோக்கங்கள்.

பிஹாரில் ஸஹர்ஷாவின் அருகே மாஹிஷ்மதீ என்ற மஹிஸீ கிராமத்தில் உக்ரதாராவின் சக்திபீடம் உள்ளது. ஸ்ரீசங்கர பகவத்பாதர்களுடன் வாதிட்ட மண்டன மிச்ரரின் வழிபாட்டுத் தெய்வம் இது. ஸ்ருஷ்டியின் தொடக்க நிலையில், காரிருள் சூழ்ந்திருந்தது. பின் சக்தியின் இயக்கத்தால் கருமை வெளுத்து வானின் நீலமாக பரவியது. அந்த இயக்கமே நீல ஸரஸ்வதி என்பர். ஒளியும் இருட்டும் பிரிந்தும் பிரியாத நிலை அது. அந்நிலையைக் கடந்து உலகம் பலதோற்றங்களைப்பெறச்செய்த இவள் தாரிணீ கடக்கச் செய்பவள்.

தாராவை ஜைனர்களும் பௌத்தர்களும் உபாஸிக்கின்றனர். பாரதத்தின் மிகப்புராதனத் தெய்வம் தாரா. அக்ஷோப்ப்யர் என்ற சிவனின் சக்தி தாரா. பௌத்தர்கள் அவலோகிதேச்வரரின் சக்தியாகத் தாராவை வழிபடுவர். பௌத்தர்கள் தாராவை ஏகஜடா என்றே அதிகம் குறிப்பிடுவர். ''एकजटासाधनं हि आर्यनागार्जुनपादैः भोटेषु उद्धृतम्'' என்று ஸாதன மாலா என்ற பௌத்த நூல் குறிப்பிடும். போட தேசம் எனும் திபேத்திலிருந்து நாகார்ஜுனர் இதனைக் கற்றுவந்தார். ஸ்வதந்த்ர தந்த்ரத்தில் பின்வருமாறு விளக்கம் காணப்படுகிறது.

मेरोः पश्चिमकूले तु चोलनाख्यो ह्रदो महान् ।
तत्र जज्ञे स्वयं तारा देवी नीलसरस्वती ॥

மேருபர்வதத்தின் மேற்கில் சோலனு என்ற புண்ய தீர்த்தத்தில் தாரை என்ற நீலஸரஸ்வதீ தோன்றினாள். இது லடாக் என்ற இடத்தின் அருகே இருக்கக் கூடும் என்று அறிஞர் கூறுகின்றனர்.

பிரும்ஹாண்ட புராணத்தின் லலிதோபாக்கியானத்தில் நீர்ப்பெருக்கு வெள்ளமாகி நாட்டையும் மக்களையும் பாதிக்கும் போது காக்கும் தெய்வமாக தாராவை வழிபடச் சொல்லியிருக்கிறது. ஸ்ரீநகரத்தில் மனம் என்ற பிராகாரம் உள்ளது. அதனைச் சுற்றிப் பெரும் வாவி. அதனை ஓடத்தால் தான் தாண்டவேண்டும். லலிதா பரமேச்வரியின் மந்திரியான மந்திரிணியும் ஸேனாநாயகியான தண்டினியும் உத்தரவிட, தாரா என்பவள் வெளியிலிருந்து வருபவர்களை ஓடம் வழியே அக்கரை சேர்க்கிறாள். அவளே வாவியைக் கடக்கின்ற பொறுப்பிலிருப்பதால் தாரா தாரிணீ தாரணேச்வரி எனப்படுகிறாள். இவள் தாரா என்ற சக்தி. தாரா வித்யையின் தேவியான தாரா வேறு என்று சிலர் கருதுகின்றனர்.

பவம் எனும் ஸம்ஸாரக் கடலைத்தாண்ட உதவிய தாரா எனும் பவதாரிணீ பின்னர் கடல் முதலிய நீரா தாரங்களைக் கடக்கவும் உதவிபுரிந்திருக்கிறாள்.

तारयिष्याम्यहं नाथ नानार्णवमहार्णवात् ।
तेन तारेति मां लोके गायन्ति मुनिपुङ्गवाः ॥

ஸம்ஸாரக்கடலைக்கடக்கச் செய்வதாலேயே தனக்கு தாரா என்ற பெயர் கிட்டியதாக தேவி சிவனிடம் கூறினாள் என்று தந்திர நூல் கூறும்.

பிரளயக்காரிருளில் வேதத்தைத் திருடிச் சென்ற ஹயக்ரீவாஸுரனை ஹயக்ரீவராகத் தோன்றிய விஷ்ணு மாய்த்து வேதத்தை மீட்டதால் உலகின் ஆதிகுருவாகிறார். நீலமேனியளான தாரையே ஹயக்ரீவரானாள் என்பர். தன் கால்களைப் பிரத்யாலீட முறையில் மாற்றிச் சவமாகிப்படுத்திருக்கிற சிவன் மீது நின்று, கத்திரி, கபாலம், கத்தி, தாமரை இவற்றைக் கைகளில் ஏந்தி கழுத்தில் முண்டமாலை, புலித்தோலாடை, இதயத்தில் நிரம்பிய கருணை வெள்ளம், இடையறாத செயலாற்றலின் இருப்பிடம் எனத் தன்னை வெளிப்படுத்திக் கொண்டவள்.

திருப்பாற்கடலைக்கடைந்தபோது எழுந்த விஷத்தை உண்டும் கலங்காதிருந்தமையால் சிவன் அக்ஷோப்யர் என்ற பெயர் பெற்றார். அவரின் சக்தியே தாரை. தாரையின் மந்திரத்தைத் தந்த ருஷியும் அக்ஷோப்யரே. தாரையின் சிரசில் அகுலராக இவர் அமர்ந்து சக்தியைக் கட்டுக்குள்ளாக்குகிறார்.

நள்ளிரவிலிருந்த விடியற்காலை வரை காளியாகி நின்றவள் விடியலின் போது தாராவாகிறாள். அக்கினிக் கோளமாக ஸூர்யமண்டலமாக ,ஹிரண்ய மண்டலமாக, விராட்டின் பரிணாமமான ஹிரண்யகர்ப்ப சக்தியாக, விச்வத்தின் உள்ளும் புறமும் நின்று அதனை உறுதிப்படுத்துகிற விசுவாதிஷ்ட்டாதா என்ற சக்தியாக, நக்ஷத்ர ஸூர்யசக்தியாக விளங்குகிறாள். உதிக்கின்ற ஸூர்யன் ருத்திரரே என்று ''அஸௌ யஸ் தாம்ரோ உதபப்ரு:'' என்ற ஸ்ரீ ருத்திரமந்திரம் விளக்கும். அந்த ருத்ர சக்தியாகி பிரளயத்திலிருந்து படைப்புக்கு வருகிற உலகியலை உருவாக்குபவள் இவள்.

பிரகிருதி எனும் தத்துவம் பரம்பொருளிடமிருந்து தனித்த முதல் தத்துவ நிலை பெற்றது. காலம் தேசம் என்று பெரும்தத்துவங்களால் மொத்த உருவாகி மஹத்தானது. அதனுள் மறைந்திருந்த சேதனாசக்தி புத்தியாகவும் ஸத்சக்தி அஹங்காரமாகவும் விரிந்தது. காளி பிரகிருதியை மஹத்தாக்கினாள். தாரா அதனை மஹத் அஹங்காரம் என்று இரு நிலைகளுக்குக் கடத்தினாள். உறங்கிக் கொண்டிருந்த உலகம் அஹங்காரத்தின் விளைவாக விழித்தெழுந்தது. இதுகாறும் உலகை மூடிக் கொண்டிருந்த ஜடத்தன்மை விலகியது. ஜடத் தன்மையைத் தந்த விஷநிலை பாம்பாகி தேவியின் சடைகளில் சுற்றி ஒதுங்கியதும் தேவி ஏக ஜடா ஆனாள்.

இரவின் அமுத சக்தியான சந்திரனும் விடியலின் செஞ்சூரியனும் உயிரினத்தின் சாரமும் தேவியின் கையிலுள்ள கப்பரையில் நிரம்பின. அதனைப்பருகிக்

கொண்டே உலகம்பல விதமாக வழி செய்கிருள். காளி என்ற பேராற்றலும் ஸரஸ்வதி என்ற பேரறிவும் ஸங்கமமடைந்த உருவே தாரா என்பர்.

3. **ஷோடசீ** :- பாலா, லலிதா, திரிபுரஸுந்தரீ, ஸ்ரீ சக்ர நாயகீ, ஸ்ரீபுரத்தின் மகாராணி, மஹாகாமேச்வரரின் மஹிஷீ, ஸத்யோஜாதர், வாமதேவர், அகோரர், தத்புருஷர், ஈசானர் என்ற ஐவரின் சக்தி, பிரும்மா, விஷ்ணு, ருத்ரர், ஈசுவரர், ஸதாசிவர் என்ற ஐவரிடமுள்ள படைப்பு காப்பு, லயம், திரோதானம், அனுக்கிரகம் என்ற ஐந்து சக்திகளின் மூலசக்தி, ஹிரண்ய கர்ப்பராகி ஜடப்பொருளிடம் சேதனத்தன்மையைப் புகுத்தி உயிரினமாக மாற்றுகிறவரின் சக்தி, அந்தபிரசாந்த நிலேயின் உருவகமான ஸந்தியா தேவி, பத்து கைகளில் அபயம், உடுக்கை, சூலம், வஜ்ராயுதம், பாசம், தொரட்டி, கத்தி, மணி, பாம்பு, தீப்பிழம்பு ஏந்தியவள், முக்கண்ணியாள், உள்ளறிவாக மலர்பவள், பதினறு கலேகள் கொண்ட பூர்ண உருவம் என்று இவளேத் தியானிப்பர். கருணேயே வடிவான காமேசனின் மடிமீதமர்ந்த காமேசி இவள். பூர்ண பரப்ரும்ஹமும் அதன் சக்தியுமாக ஒருங்கே காட்சிதருகிருள்.

மறுபுறம், இளஞ் சூரியப்பேரொளியாக நான்குகைகளில் பாசம் அங்குசம் வில் பாணம் ஏந்தியவளாக சிவமும் சக்தியும் இணேந்த வடிவினளாக, தன்னல் படைக்கப்பெற்று விரிந்து வருகிற உலகைச் சீரும் சிறப்பும் நேர்மையும் ஒளியும் பெற்றதாக இயங்கவைக்கிற ஸ்ரீமாதாவாக விளங்குபவள். இவளது இள நிலேயே பாலா.

4. **புவனேச்வரீ**:- பகலில் ஸௌரிய சக்தியாக வெளிப்பட்டு உலகைத் தானியங்கியாக இயங்கச் செய்து அதனே மேற்பார்வையிடுபவள். ஸோமனின் சக்தியை இரவுமுழுவதும் பரப்பிப் புஷ்டி தருபவள். அக்னி, வாயு, ஸௌர்யன், ம்ருத்யு, இந்திரன் என்ற ஐந்து அதிகாரி தேவதைகளால் உலகநியதியைக் கட்டுப்படுத்துபவள், ஹ்ருல்லேகா என்ற மாயா சக்தியாகி தோற்ற அளவில்

உண்மையானதைப் பரமார்த்தஸத்யமாக உணரச் செய்பவள், அதற்காக ஹ்ரீம் என்ற தேவீ பிரணவத்தின் உட்பொருளாகி நிற்பவள்.

விஷத்தைக் குடித்த பரமசிவனின் அருகில் அமர்ந்து நெஞ்சில் தடவிக் கொடுத்து விஷத்தைத் தொண்டையில் தேக்கிக்கட்டுப்படுத்திச் சிவ பெருமானுக்குத் தெளிவு தந்த அம்ருதேச்வரி. மூவுலகைத் தாங்கிப் போஷிப்பவள். கருணையைக் காட்டுகிற புன்சிரிப்பும் நளினமும் வெளிப்படும் போதே கட்டுப்பாடும் அடக்கமும் அவசியமென உணர்த்துகிற பாசமும் தொரட்டியும் கையில். ''ஸ்ரீ மஹாராஜ்ஞீ: நறுமணம் மிக்கவரும் புஷ்டி தருபவரும், கொடிக்காம்பிலிருந்து வெள்ளரிப்பழத்தைப் பிரித்தெடுப்பது போல் எளிதில் நோகாமல் ஸம்ஸாரபந்தத்தை அகற்றுபவருமான திரியம்பகருத்திரரின் சக்தி. மூவுலகையும் கட்டியணைக்கிற தாயான திரியம்பகசக்தி. 84லட்சம் உயிரினப் பிரிவுகளைப் பெற்று வளர்த்து வழிகாட்டுகிற புவன ஈச்வரி.

5. **ச்சின்னமஸ்தா** - தேவி தன் தோழிகளான ஜயா மற்றும் விஜயாவுடன் மந்தாகினியில் நீராடச் சென்றாள். நீராடியதும் மூவருக்கும் பசி மிகுந்தது. உடல் கருத்து வாடியது. தோழிகள் உணவை வேண்ட, தேவி பொறுத்துக் கொள்ளச் சொன்னாள். அவர்கள் பொறுத்துக் கொள்ள முடியாதபடி பசி மிகுந்ததும், தேவிபரிவுடன் தன் வலதுகை விரல் ஓரத்தில் அழுத்தம் தந்து அதனால் தன் கழுத்தைத் துண்டித்து இடது கையில் ஏந்தினாள். கழுத்திலிருந்து மூன்றுதாரைகளாக இரத்தம் பீரிட்டெழுந்தது. இருதாரைகள் தோழிகளின் வாயிலும் ஒருதாரை இடதுகையிலுள்ள தன் தலையிலுள்ள வாயிலும் விழும்படி தேவி அமைத்தாள். மூவரும் பசி நீங்கி நிறைவு பெற்றனர்.

கைகளில் கத்திரி, துண்டாகிப் பிரிந்த தன் தலை, கப்பரை ஏந்திய ஆடையற்ற தோற்றம். வெட்டித்தாங்கிய அவளது தலையில் வெளுத்த கேசங்கள் அலையலையாகக் காற்றில்

பறக்கின்றன. நீலரத்தினம் ஒன்று பாம்பால் கேசங்களில் பிணைக்கப்பட்டுள்ளது. மார்பில் அல்லியும் தாமரையும் கோர்த்தமாலை. திருவடியில். கீழே ரதியும் மன்மதனும் கூடிப்படுத்த நிலை. மன்மதனின் முதுகு மீது கால் மாற்றித் தேவி நடனம் புரிகிறாள்.

தேவியின் தலையற்ற உடல் சிவன், இடது கையிலுள்ள தலை சக்தி. உடலிலிருந்த பிரிந்து வெளியேறுகிற சக்தியைத் தோழிவடிவிலும் தானும் பருகித் தன் நிறைவைப்பெறுகிறாள். புவனேச்வரியாகத் தான் வளர்த்த உலகம் மீண்டும் தன்னுள் லயமடைய, சக்தியையும் சிவனையும் பிரிக்கிற லய ஆரம்ப நிலை. கத்திரியும் கபாலமும் இந்தப் பிரிவினைக்கான ஆயுதங்கள். ஆயுதமும் தேவையற்ற நிலையைக் காட்ட கையாலேயே தலையைத் துண்டித்த வரலாறு.

6. **திரிபுரபைரவி :-** பிரளயம் இருவகைப்படும். ஒன்று மகாப்பிரளயமாக பதினான்கு புவனங்களும் ஒடுங்குகிற நிலை. மற்றொன்று, ஒவ்வொரு ஜீவனிடமும் வாழ்வின் இறுதியில் பிராண சக்தியைத் துண்டித்து உணர்விழக்கச் செய்கிற பிரளயம். அது எவ்வாறு நேர்கிறதென்பதை விளக்க அன்றன்று பகலும் இரவுமாகி, இரவில் வரிசைப்படி தன்னிலை இழப்பும் நிலையறியாமையும் புது விழிப்புமென மாற்றத்தை உணர்த்துவது. இதனைச் செய்கிற சக்தி திரிபுரபைரவி. ஸ்தூலம் ஸூக்ஷ்மம் காரணம் என்ற சரீரம் உலகிற்கும் தனி உயிரினத்திற்கும் பொதுவே. இந்த மூன்று சரீரங்களே முப்புரங்கள். இவற்றை உருவாக்குபவளும் உருவிழக்கச் செய்பவளும் இவளே. இது காலத்தின் துணை கொண்டு நிகழ்வதால் காலபைரவரின் சக்தியாகிறாள்.

ஸூரியனின் செவ்வொளி கொண்டமேனி, சிவந்த ஆடை, முண்டத்தலைகளாலான மாலை, கைகளில் ஜபமாலை புத்தகம் அபயம் மற்றும் வரம் ஏந்தியவள். (சிவனின் சகோதரியாகத் தோன்றி பிரம்மாவின் சக்தியானவள். ஸம்ஹாரத்தின் தன்மையும் படைப்பாற்றலையும் உணர்ந்து

உதவுபவள்). மூன்று கண்களுடன் தாமரை போன்று சிவந்த முகம், தலையில் சந்திர கலையணி, லயமடையச் செய்யுமுன் சுய அறிவும் புற அறிவுமாகப் பிரிந்த அறிவை ஒடுக்கி அறிவின் மூல நிலையான ஜ்ஞான சக்தி நிலைக்குக் கொணர்பவள்.

7. **தூமாவதீ** :- ஸம்ஹாரநிலையின் மற்றொருதோற்றம் இவள். சக்தி ஒரு நாள் பசி மிகுந்த நிலையில் சிவனிடம் உணவு யாசித்தாள். (சிவன் சக்தியிடம் உணவு யாசித்த அன்னபூர்ணா, நிலை ஸ்திதி நிலையில்). சிவன் அதனைப் பொருட்படுத்தாமல் மௌனியாக நின்றார். உதாசீனப்படுத்தப்படுவதான உணர்வும் பசியும் மேலெழ, சக்தி கோபவசப்பட்டுச் சிவனையே விழுங்கி விட்டாள். சிவனின் கொதிப்பால் சக்தியுடலிலிருந்து புகை எழுந்து சூழ்ந்தது. தேவி கிழவியாக, விதவையாக, பசியால் வாடிமெலிந்து வயிற்றில் குழி விழுந்தவளாகக் கோரத்தோற்றம் பெற்றாள். இவளே தூமாவதீ.

விசுவமான உலகமாகத் தோன்றிய சக்தி தான் வெளிப்பட உதவிய சிவனை விழுங்கித் தன்னில் ஒடுக்க, உலகம் பிரளயத்தில் பொசுங்கிப் புகைய, சக்தியின் ஆகாரமாக மங்களத்தோற்றம் பெற்ற சிவ பெருமான் மறைந்ததால். விதவைத் தோற்றமும் வாட்டமும் பெற்றது. இதுகாறும் மங்களம் இது என்ற உணர்ந்த நிலைமாற அமங்களமான நிலை நேர்ந்தது. பிரகிருதியில் புருஷனென்ற நிலை ஒடுங்கியது. புருஷனாக, தனித்தனியாக வெளிப்பட உதவிய அறிவும் ஆற்றலும் மறைய, உடல்தளர்ந்து உணர்விழந்து ஆடைநெகிழ்ந்து அகல, மெலிந்த விதவையாகத் தோன்றினாள். தான் பொருட்படுத்திக் கொண்டிருந்த தவனை இழந்தநிலை விதவநிலை. பரந்து காற்றில் அசைகிற வெண்ணிறக் கூந்தல், பற்கள் உதிர்ந்து பொக்கையான வாய், காக்கைக் கொடியுள்ள தேர், மெலிந்து தொங்குகிற மார்பகம், வரண்டு நடுங்குகிற பார்வை, இளைத்து நீண்ட மூக்கு, கலகத்தைத் தூண்டி, அமைதியைக்குலைக்கிற பயங்கரத்தோற்றம். தன்னளவில் உலகம் தன்னில் ஒடுங்கியதைக் கண்ட ச்மசான அமைதி.

கார்த்திகையின் கடை எட்டுநாட்களும் மார்கழியின் முதல் எட்டுநாட்களும் யமனின் தெற்றிப்பல் (யமதம்ஷ்ட்ரை) என்று கூறுவர். எதிலும் மிதமும் கவனமும் கொண்டவனே உயிர்வாழ்வான். இவை இயல்பாக அமைகிற கண்டம் எனப்பெறும் நாட்கள். இந்நாளில் தீப ஒளியால் சுற்றுப்புற மாசு கழித்துத் தூய்மை பெறும் பண்டிகைகளான தீபாவளி — கார்த்திகைத் திருநாள் முன்னேற்பாடாகக் கொண்டாடப்பெறுகின்றது. தூமாவதியைக் கொண்டாடுகிற நன்னாளும் இதுவே. ஓர் ஆண்டை ஒருநாளாகத் தேவர் கொள்வர். அந்த தேவதினம் மார்கழி இறுதியில் விடியும். ஆனி இறுதியில் இருள் சூழும். பொழுது நன்கு விடிய தேவதினத்தின் பிராம்ஹமுஹூர்த்தத்தில் தூமாவதி வழிபாடு. இப்போது அவள் ஜ்யேஷ்டா தேவியும் கூட. விடிந்ததும் லக்ஷ்மீ எனும் கனிஷ்டா தேவியாக இவளே மாற இருக்கிறாள். தூமாவதியை வழிபட தன்வெளித் தோற்றத்தை அகற்றி மங்களமான பரிவு மிக்க உள்ளப்பாங்கை வெளிக் கொணர்வாள் என்பதே உட்கருத்து.

8. பகளாமுகீ :- காலத்தாலும் தேசத்தாலும் அப்பாற்பட்டதையும் கண்டு, பிறரையும் காணச் செய்வதை பீதாம்பர வித்யை என்பர். அதர்வா, பிரத்யங்கிரா, பீதாம்பரீ, ஆதர்வண பத்ரகாளீ பல்கா, பகளா என்ற பல நிலைகளில் இந்த தேவி தோன்றுகிறாள்.

கிருதயுகத்தில் உலகை அழிக்கின்ற ஊழிக்காற்று திடீரெனத் தோன்றிற்று. அது பிரளயத்திற்கு உரிய வேளை அல்ல. ரக்ஷணப்பணி புரிகிற விஷ்ணு ஸௌராஷ்டிரத்தில் (குஜராத்தின் பகுதி) ஹரித்ராஸரஸ் என்ற தீர்த்தத்தின் கரையில் பீதாம்பரா குறித்துத் தவமிருந்து வழிபட்டார். பீதாம்பரா தேவியின் அருளால் அக்கொடுமை அகன்றது. அந்த பீதாம்பரா தான் தந்திரம் கூறும் பகளாமுகீ. உலகின் இயல்பான தர்மத்தின் தாரணசக்திக்கு எதிரான துஷ்டசக்தியை அடக்கி அகற்றுபவள் இவள். (இன்றும் குஜராத்தில் இந்த தேவியை வழிபடுபவர் பலர்.

பீதாம்பராபீடம் அங்கு உள்ளது). இவளை வழிபட்ட சியவனர் இந்திரனின் வஜ்ராயுதத் தாக்குதலை நிறுத்தி இந்திரனின் கைகளை உணர்விழக்கச் செய்து ஸ்தம்பனம் செய்த வரலாறு புராணங்களில் உள்ளது. ஆபிசார முறையால் யந்திர தந்திர முறைகளால் துன்புறுத்தப்பெறுபவர் இவள் அருளால் துன்பம் நீங்கப்பெறுவர்.

எதிரியின் நாக்கை இடக்கையால் பிடித்து வெளியே இழுத்து வலதுகையிலுள்ள கதையாயுதத்தால் அவனை அடித்துச் செயலிழக்கச் செய்பவள், செம்மஞ்சள் ஆடை உடுத்தியவள் என்றவாறு இவளைத் தியானிப்பர்.

9. **மாதங்கீ** :- மதங்கமுனிவரின் பெண். காட்டில் வாழ்கிற வேடுவர் போன்ற பண்படுத்தப்பெருத மக்களுக்கு வழிகாட்ட மதங்கர் அந்தச் சூழ்நிலையில் ஆசிரமம் அமைத்துவாழ்ந்தார். அவர் வழிபாட்டில் இளகிய தேவி அவர் மகளாகப் பிறந்தாள். சிவனே மதங்க முனிவரானுர். சக்தி அவரது புதல்வியாகத் தோன்றிஞள் என்றும் வரலாறு. காளிதாஸ கவியின் வழிபடுதெய்வமான சியாமளா இவள். பண்டாசுரவதத்திற்காக வந்த லலிதாவின் மந்திரிணியான ராஜசியாமளா இவள், வனவாசிகளிடையே வாழ்ந்ததால் சாண்டாளீ, உச்சிஷ்ட சாண்டாளி.

மேகம் அல்லி போன்ற வெளுத்த கருநீலமேனி, ஒளி மிக்க மேனியழகு, அமர ரத்னஸிம்ஹாஸனம், பாசம் அங்குசம் சக்தி கேடயம் கைகளில், அசுரர்களை மாய்த்துத் தேவர்களைக் காப்பதில் ஆர்வம், மகிழ்ச்சி நிரப்புகிற சூழ்நிலை. தியானத்திற்கு உரிய உருவகம் இது.

மற்ருென்று - கையில் மாணிக்கத்தாலான வீணை, கழுத்தில் சோழி - சங்காலானமாலை, காதில் பனை யோலையாலான காதணி, தலையில் மயில் தோகை, வேடுவர் மக்களுடன் விளையாட்டு, மதுபானத்தால் கிரங்கிச் சோர்ந்த தடுமாற்றம், அளவற்றுச் சுவை மிக்க பாட்டும் பேச்சும் ஆட்டமும். சியாமளா தண்டகம் இப்படி இவளைத் தியானிக்கச் செய்யும். ஸுமுகீ என்ற கூட

நினைக்கப்பெறுபவள். பேச்சுவன்மையும் வசீகரமும் மன நிறைவும் உல்லாஸமும் அருள்கிற தேவி.

10. **கமலா** :- தூமாவதிக்கு நேர் எதிரான உருவகம். ஜ்யேஷ்டா தேவியின் நக்ஷத்திரம் ஜ்யேஷ்டா (கேட்டை) அதிலிருந்து 180ம் அம்சத்தில் உள்ளது. ரோகிணீ. வளர்ச்சிபொங்குகிற ரோஹிணீ கமலாவின் நட்சத்திரம். தங்க நிறத்து மேனி ஒளி, இமயம் போன்று பருத்த நான்கு வெள்ளை யானைகள் துதிக்கையில் தாங்கியதங்க அமுதககசலசத்து நீரால் நீராட்ட, தேவப்பெண்கள் சாமரம் வீசத்தாமரை மீது அமர்ந்து கிரீடமும் இடுப்பில் பட்டாடையும் வரம் அபயமும் இரு தாமரைகளும் கொண்ட நான்கு கைகளுமாகக் காட்சிதருபவள். - ஸ்ரீ, லக்ஷ்மீ, கமலாத்மிகா என்பர். ஜ்யேஷ்டா தேவியும் இவளது முன்நிலையே, உதிக்கின்ற கதிரவனின் ஒளியில் தாமரை மீது அமர்ந்து காட்சிதருபவள். முகத்தில் புன் சிரிப்பு, கைகளில் அமுதகலசம், பாசம் அங்குசம், வரதமுத்திரை, செந்நிற ஆடை, மிக மிக அழகி, விரும்பியதைத் தருபவள். (உலகவழக்கில் மூத்தவள் என்ற வகையில் மூதேவியை ஜ்யேஷ்டா தேவி என்பர். தூமாவதியை ஜ்யேஷ்டா தேவி என்பதும் உண்டு. லக்ஷ்மியின் முன் நிலையே ஜ்யேஷ்டாதேவி என்பது நினைவிற் கொள்ளத் தக்கது.)

கமலாவின் மற்றொரு தோற்றம் வஸுதா (**वसुधा**) என்ற பசுமையும் செழிப்பும் வளர்ச்சியும் அடையாளமாகக் கொண்டபூமிதேவி. வஸுதாலக்ஷ்மி என்று தந்திரங்கள் குறிப்பிடுகின்றன.

11. **துர்க்கா** :- இவளுக்குப் பல ஸஹஸ்ரநாமங்கள் உண்டு. அவற்றில் தகாராதியும் இங்கு தரப்பட்டுள்ளதும் அதிகம் வழக்கிலுள்ளன. நம்மைத் தாங்குகிற பூமியின் தாரண சக்தி, வாயுவின் பிராண சக்தி, நீரின் ஜீவன சக்தி, அக்னியின் பசன சக்தி, ஆகாயத்தின் உருவால் பருக்கின்ற சக்தி, தனி ஜீவனிடமுள்ள பசி தாகம் தூக்கம் அறிவு, நினைவாற்றல் என்று பலவாறு இயங்குகிற சக்திகள்

அனைத்தும், நம்பகுத்தறிவால் தனித்தறிய முடியாதவை அதன் காரணமாக சக்திகளின் மூல நிலையைத் துர்க்கா - இன்னதெனப்புரிபடாதவள் என்று குறிப்பிடுகின்றனர். அதற்கு நாம் இணங்க அது நமக்கு இணங்குகிறது. ''ஏகைவ சக்தி: பரமேச்வரஸ்ய பிந்நா சதுர்த்தா விநியோக காலே । போகே பவானீ ஸமரேஷு துர்க்கா, கோபேச காளீ து அவநே ச விஷ்ணு:'' என்பர் பெரியோர். ''பரம்பொருளின் சக்தி ஒன்றே. சுகம் தருபவள் பவானீ. போர் முனையில் வீரம் தருபவள் துர்க்கை, கோபத்தால் உக்ரமடைய காளீ. காக்க விஷ்ணு. பொருள் ஒன்றே விநியோக நிலை நான்கு.'' இவளுக்கும் பலவடிவங்களை துர்காஸப்தசதீ கூறும். நவராத்திரியில் ஒன்பது நாட்களிலும் ஒன்பது கன்னிகைகள் வடிவில் இவளை வழிபடுவர், சூலினீ, காத்யாயனீ (காத்தாயி) வன துர்கை, விஷ்ணுதுர்கை, சிவதுர்கை, பிரும்ம துர்கை, மஹிஷாஸுரமர்தினீ, பிரதிக்ரியா சூலினீ, மஹாகாளீ, மஹாலக்ஷ்மீ, மஹாஸரஸ்வதீ, விந்தியவாஸினீ, நந்தா முதலிய பல உருவகங்களும் மந்திர தந்திர வழிபாடுகளும் உண்டு. சரபர் எனப்படும் ஸாளுவேசர் சரபவடிவிலுள்ளவர். அவரது சக்திகள் காளி துர்க்கை என இருவர். சரபரின் சக்தியும் இவள். அவளது ஆயிரம் நாமங்களிலும் இவற்றின் விளக்கத்தைக் காணலாம்.

12. **ஸரஸ்வதீ** :- தேவியின் தோற்றங்களில் பரமேசுவரனின் ஸகோதரியாக, பிரும்மாவின் பத்தினியாக, ஸ்ருஷ்டிஸம்ஹாரக் கூட்டுசக்தியாக கலைகளுக்கும் கல்விக்கும் அறிவிற்கும் வாக்கிற்கும் அதிபதியாக இவள் விளங்குகிறாள். வீணையும் புத்தகமும் ஸ்படிகமணி மாலையும் கிளியும் ஏந்தி வெண்-தாமரை மீது அமர்ந்தவளாக ஹம்ஸத்தை வாகனமாகக் கொண்டஸரஸ்வதீ பொதுவாகத் தியானத்தில் தோன்றுகிறாள். எல்லாம் இவளிடம் வெண்ணிறம் கொண்டவை. சுத்தஜ்ஞானத்தின் வடிவம். வெளியே பகட்டாகத் தெரியாமல் உள்ளே மறைந்து என்றும் அகலாமல் எல்லா வெளி அறிவுகளையும் உள்ளறிவாக மாற்றுகிறவளானதால் உள்ளே மறைந்த நீரூற்று

போலிருப்பவளானதால் ஸரஸ்-வதீ. புலனறிவும் நூலறிவும் மற்றதும் இம்மூல அறிவு ஊற்றின் வெளிக்கசிவுகளே. மாதங்கீ, தாரா, பாலா முதலிய ஞானதேவிகளின் பல அம்சங்கள் இவளிடம் பொருந்தும்.

13. **பாலா** :- காமேச்வர காமேசுவரிகளின் மானஸ ஸங்கல்பவடிவில் தோன்றிய இளம் லலிதை இவள். பஞ்சதசாக்ஷரியின் வாக்பவம், காமராஜம், சக்தி கூடம் என்று மூன்று பிரிவின் ஸூக்ஷ்ம ரூபமான மூன்றக்ஷரங்களை மந்திரமாகக் கொண்டவள். அருண ஸூர்யனின் ஒளிக்கதிர் சூழ, கைகளில் ஜபமாலையும் புத்தகமும், அபயமும் வரமும் கொண்டு மலர்ந்த செங்கழனீர் பூ மீது அமர்ந்திருப்பவள். மங்களமே உருவானவள். இவளே பாலா, பாலஸரஸ்வதீ, பாலா பரமேச்வரி, பாலாதிரிபுரஸுந்தரீ - இவளது ஓரக்ஷரமான வாக்பவ பீஜத்தின் சக்தியால் திரிபுரா ரஹஸ்யம் என்ற நூல் பரசுராம - தத்தாத்ரேயஸம்வாதரூபமாகத் தோன்றியது. லகுபட்டாரகர் லகுஸ்தவத்தில் பாலாதேவியின் மூன்றக்ஷர மந்திரத்தின் ஒவ்வொரு அக்ஷரத்தின் பெருமையைப் பல சுலோகங்களில் கூறியுள்ளார்.

14. **காமாக்ஷீ** :- திரிபுரஸுந்தரியின் அனுக்ரஹ சக்திமிக்க தோற்றமிவள். துர்வாஸர், ஹயக்ரீவர், அகஸ்தியர், லோபா முத்திரை, தத்தர், மூகர், என்று பலர் இவளை வழிபட்டுள்ளனர். பல அசுரசக்திகளை அழித்தவள். உக்கிர சக்தியாக இருந்த இவள் தாரா, காளீ என்று பலவாக வழிபடப்பட்டிருந்தாள். ஸ்ரீசங்கரபகவத்பாதர் இவளை ஸ்ரீசக்ர அர்த்த மேருவில் கலா கர்ஷணத்தால் பரம அனுக்ரஹமூர்த்தியாக ஸாந்நித்யம் பெறச்செய்தார். ஸௌபாக்ய லக்ஷ்மீகல்பத்திலுள்ள ஸ்ரீ காமாக்ஷியின் 500 நாமங்கள் (பஞ்சசதீ) அடங்கிய துதி கடைசியில் கிரீடமாக அமைந்துள்ளது. ஸர்வஸமஷ்டி சக்திஸ்வரூபிணி அவள்.

இங்கு வெளியாகியுள்ள சத - ஸஹஸ்ர நாமஸ்தோத்திரங்களைத் தவிர மற்றும் பல ஸஹஸ்ரநாமஸ்தோத்திரங்கள் உள்ளன. காளீ தாரா

இவர்களது இருஸஹஸ்ர நாமஸ்தோத்திரங்கள் இதில் இடம் பெறுகின்றன. மற்றவர்க்கு ஒவ்வொரு ஸ்தோத்திரமே வெளியாகியுள்ளது. மற்ற ஸஹஸ்ரநாமஸ்தோத்திரங்களை வெளியிடவும் தேவி மனம் கொள்வாள். ஆங்காங்கு வழக்கிலுள்ளதைத் தேடிபபெற வாய்ப்பு தருவாள்.

தந்திரங்களில் ஒவ்வொரு தெய்வத்திற்கும் பஞ்சாங்கஸ்தோத்திரங்கள் கூறப்பட்டுள்ளன. படலம் பூஜைமுறை ஒட்டிய பத்ததி, கவசம், ஸஹஸ்ரநாமம் ஸ்தோத்திரம் என்று ஐந்து அம்சங்கள். இவற்றைத் தவிர அர்களம் கீலகம் மானஸபூஜைஸ்தோத்திரம் மந்திரவர்ணஸம்புடிதஸ்தோத்திரம் என்று பல உண்டு. ஒவ்வொரு தெய்வத்தின் வழிபாட்டிலும் இவை அனைத்தையும் பாராயணம் செய்வர். இவை அனைத்திற்கும் ருஷி, சந்தஸ், தேவதை, விநியோகம் ,அங்கநியாஸம், கரநியாஸம் தியானம் மானஸபூஜை என்றும் பலமுறைகளும் உண்டு. அவசியமான நியமங்களுடன் குரு முகமாக முறை கற்றுப்பின் அவற்றைச் செய்வதே ஏற்றது. தெய்வ அருள் கூடி வழிகாட்டப் பெற்றவரே முறைப்படி இவற்றைப் பாராயணம் செய்யத் தகும். அத்தகுதிபெறவும் குருமுகமாகவோ தெய்வஸந்நிதியிலோ நியாஸம் முதலானதின்றி நாமாபாராயணமாகத் தொடங்கலாம். அதுவே தெய்வ அருளைக் கூட்டுவித்து வழிகாட்டும் .அந்த நாமபாராயணத்திற்கு உதவுவதே இந்த வெளியீட்டின் நோக்கம்.

श्रीगुरुभ्यो नमः ।

श्रीमात्रे नमः ।

# देवीनामस्तोत्रमञ्जरी

## प्रथमो भागः

## देवी-शत-सहस्रनामस्तोत्राणि

### श्री कालीध्यानम्

१. सद्यश्छिन्नशिरः कृपाणमभयं हस्तैर्वरं बिभ्रतीं
घोरास्यां शिरसां स्रजा सुरुचिरां उन्मुक्तकेशावलिम् ।
सृक्कासृक्प्रवहां श्मशाननिलयां श्रुत्योः शवालंकृतिं
श्यामाङ्गीं कृतमेखलां शवकरैर्देवीं भजे कालिकाम् ॥ १ ॥

२. शिवारूढां महाभीमां घोरदंष्ट्रां हसन्मुखीम् ।
चतुर्भुजां खड्गमुण्डवराभयकरां शिवाम् ॥ २ ॥

मुण्डमालाधरां देवीं ललज्जिह्वां दिगंबराम् ।
सदा सञ्चिन्तये कालीं श्मशानालयवासिनीम् ॥ ३ ॥

३. नमामि दक्षिणामूर्तिं कालिकां परभैरवीम् ।
भिन्नाञ्जन चयप्रख्यां प्रवीर शवसंस्थिताम् ॥ ४ ॥

गलच्छोणितधाराभिः स्मेराननसरोरुहाम् ।
पीनोन्नतकुचद्वन्द्वां पीनवक्षोनितंबिनीम् ॥ ५ ॥

दक्षिणां मुक्तकेशालीं दिगम्बर विनोदिनीम् ।
महाकालशवाविष्टां स्मेराम्बरपरिस्थिताम् ॥ ६ ॥

मुखसान्द्रस्मितामोदमोदिनीं मदविह्वलाम् ।
आरक्तमुखसान्द्राभिः नेत्रालीभिर्विराजिताम् ॥ ७ ॥

शवद्वयकृतोत्तंसां सिन्दूर तिलकोज्ज्वलाम् ।
पञ्चाशन्मुण्डघटितमाला शोणित लोहिताम् ॥ ८ ॥

नानामणि विशोभाढ्यनानालङ्कारशोभिताम् ।
शवास्थिकृत केयूरशंखकङ्कणमण्डिताम् ॥ ९ ॥

शववक्षः समारूढां लेलिहानां शवं क्वचित् ।
शवमांसकृतग्रासां साट्टहासं मुहुर्मुहुः ॥ १० ॥

खड्गमुण्डधरां वामे सव्येऽभयवरप्रदाम् ।
दन्तुरां च महारौद्रीं चण्डनादातिभीषणाम् ॥ ११ ॥

शिवाभिर्घोररूपाभिः वेष्टितां भयनाशिनीम् ।
''माभैर्माभैः'' स्वभक्तेषु जल्पन्तीं घोरनिःस्वनैः ॥ १२ ॥

यूयं किमिच्छत ब्रूत ददामीति प्रभाषिणीम् ।
ध्यायामि तां महाकालीं सर्वोपद्रववारिणीम् ॥ १३ ॥

# श्रीकालीशतनामस्तोत्रम्

भैरव उवाच ॥

शतनाम प्रवक्ष्यामि कालिकाया वरानने ।
यस्य प्रपठनाद्वाग्मी सर्वत्र विजयी भवेत् ॥ १ ॥

काली कपालिनी कान्ता कामदा कामसुन्दरी ।
कालरात्रिः कालिका च कालभैरवपूजिता ॥ २ ॥

कुरुकुल्ला कामिनी च कमनीयस्वभाविनी ।
कुलीना कुलकर्त्री च कुलवर्त्मप्रकाशिनी ॥ ३ ॥

कस्तूरीरसनीला च काम्या कामस्वरूपिणी ।
ककारवर्णनिलया कामधेनुः करालिका ॥ ४ ॥

कुलकान्ता करालास्या कामार्ता च कलावती ।
कृशोदरी च कामाख्या कौमारी कुलपालिनी ॥ ५ ॥

कुलजा कुलकन्या च कुलहा कुलपूजिता।
कामेश्वरी कामकान्ता कुञ्जरेश्वरगामिनी॥ ६॥

कामदात्री कामहर्त्री कृष्णा चैव कपर्दिनी।
कुमुदा कृष्णदेहा च कालिन्दी कुलपूजिता॥ ७॥

काश्यपी कृष्णमाता च कुलिशाङ्गी कला तथा।
क्रींरूपा कुलगम्या च कमला कृष्णपूजिता॥ ८॥

कृशाङ्गी किन्नरी कर्त्री कलकण्ठी च कार्तिकी।
कम्बुकण्ठी कौलिनी च कुमुदा कामजीविनी॥ ९॥

कुलस्त्री कीर्त्तिका कृत्या कीर्तिश्च कुलपालिका।
कामदेवकला कल्पलता कामाङ्गवर्धिनी॥ १०॥

कुन्ता च कुमुदप्रीता कदम्बकुसुमोत्सुका।
कादम्बिनी कमलिनी कृष्णानन्दप्रदायिनी॥ ११॥

कुमारीपूजनरता कुमारीगणशोभिता।
कुमारीरञ्जनरता कुमारीव्रतधारिणी॥ १२॥

कङ्काली कमनीया च कामशास्त्रविशारदा।
कपालखट्वाङ्गधरा कालभैरवरूपिणी॥ १३॥

कोटरी कोटराक्षी च काशी कैलासवासिनी।
कात्यायनी कार्यकरी काव्यशास्त्रप्रमोदिनी॥ १४॥

कामाकर्षणरूपा च कामपीठनिवासिनी।
कङ्किनी काकिनी क्रीडा कुत्सिता कलहप्रिया॥ १५॥

कुण्डगोलोद्भवप्राणा कौशिकी कीर्तिवर्धिनी।
कुम्भस्तनी कटाक्षा च काव्या कोकनदप्रिया॥ १६॥

कान्तारवासिनी कान्तिः कठिना कृष्णवल्लभा।
इति ते कथितं देवि गुह्याद्गुह्यतरं परम्॥ १७॥

प्रपठेद्य इदं नित्यं कालीनामशताष्टकम् ।
त्रिषु लोकेषु देवेशि तस्यासाध्यं न विद्यते ॥ १८ ॥

प्रातःकाले च मध्याह्ने सायाह्ने च सदा निशि ।
यः पठेत्परया भक्त्या कालीनामशताष्टकम् ॥ १९ ॥

कालिका तस्य गेहे च संस्थानं कुरुते सदा ।
शून्यागारे श्मशाने वा प्रान्तरे जलमध्यतः ॥ २० ॥

वह्निमध्ये च सङ्ग्रामे तथा प्राणस्य संशये ।
शताष्टकं जपन्मन्त्री लभते क्षेममुत्तमम् ॥ २१ ॥

कालीं संस्थाप्य विधिवत्स्तुत्वा नामशताष्टकैः ।
साधकस्सिद्धिमाप्नोति कालिकायाः प्रसादतः ॥ २२ ॥

—★—

## श्रीकालीसहस्रनामस्तोत्रम् (ककारादि)

कैलासशिखरे रम्ये नानादेवगणावृते ।
नानावृक्षलताकीर्णे नानापुष्पैरलङ्कृते ॥ १ ॥

चतुर्मण्डलसयुक्ते भृङ्गारमण्डपे स्थितम् ।
समाधौ संस्थितं शान्तं क्रीडन्तं योगिनीप्रियम् ।
तत्र मौनधरं दृष्ट्वा देवी पृच्छति शङ्करम् ॥ २ ॥

देव्युवाच ॥

किं त्वया जप्यते देव किं त्वया स्मर्यते सदा ।
केन मन्त्रेण तपसा कलौ पापसमाकुले ।
आयुष्यं पुण्यरहिते कथं भवति तद्वद ॥ ३ ॥

शिव उवाच ॥

विना मन्त्रं विना स्तोत्रं विनैव तपसा प्रिये ।

विना बलिं विना न्यासं भूतशुद्धिं विना प्रिये ॥ ४ ॥

विना ध्यानं विना यन्त्रं विना पूजादिना प्रिये ॥
विना क्लेशादिभिर्देवि देहदुःखादिभिर्विना ॥ ५ ॥

सिद्धिराशु भवेद्येन तदेवं कथ्यते मया ।
शक्तिस्तु कुण्ठिता जाता तथा रूपं न सुन्दरम् ॥ ६ ॥

चिन्ताविष्टा तु मलिना जाता त्रिपुरसुन्दरी ।
क्षणं स्थित्वा ध्यानपरा कालीचिन्तनतत्परा ॥ ७ ॥

तदा काली प्रसन्नाभूत्क्षणार्धेन महेश्वरी ।
वरं ब्रूहि वरं ब्रूहि वरं ब्रूहीति सादरम् ॥ ८ ॥

सुन्दर्युवाच-
मम सिद्धिवरं देहि वरो यः प्रार्थ्यते मया ।
तादृगुपायं कथय येन शक्तिर्भविष्यति ॥ ९ ॥

श्रीकाल्युवाच ॥

मम नामसहस्रञ्च मया पूर्वं विनिर्मितम् ।
मत्स्वरूपं ककाराख्यं महासाम्राज्यनामकम् ॥ १० ॥

वरदानाभिधं नाम क्षणार्धाद्वरदायकम् ।
तत्पठस्व महामाये तव शक्तिर्भविष्यति ॥ ११ ॥

ततः प्रभृति श्रीविद्या तन्नामपाठतत्परा ।
तदेव नामसाहस्रं सुन्दरीशक्तिदायकम् ॥ १२ ॥

कथ्यते नामसाहस्रं सावधानमनाः शृणु ।
सर्वसाम्राज्यमेधाख्य-नामसाहस्रकस्य च ॥ १३ ॥

महाकाल ऋषिः प्रोक्त उष्णिक्छन्दः प्रकीर्तितम् ।
देवता दक्षिणा काली माया बीजं प्रकीर्तितम् ॥ १४ ॥

हूँशक्तिः कालिकाबीजं कीलकं परिकीर्तितम्।
ध्यानञ्च पूर्ववत्कृत्वा साधयस्वेष्टसाधनम्॥ १५ ॥

कालिकावरदानादिस्वेष्टार्थे विनियोगतः।
कीलकेन षडङ्गानि षड्दीर्घाब्जेन कारयेत्॥ १६ ॥

ओं अस्य श्रीसर्वसाम्राज्यमेधानामक-कालीसहस्रनामस्तोत्र महामन्त्रस्य, महाकालः ऋषिः, अनुष्टुप् छन्दः, श्री दक्षिणमहाकाली देवता। ह्रीं बीजम्, हूं शक्तिः, क्रीं कीलकम्। कालीवरदानाद्यखिलेष्टार्थे पाठे विनियोगः।

न्यासाः- ऋष्यादिन्यासः - श्री महाकाल ऋषये नमः (शिरसि)। अनुष्टुप् छन्दसे नमः (मुखे)। श्री दक्षिणकालीदेवतायै नमः (हृदये)। ह्रीं बीजाय नमः (गुह्ये)। हूं शक्तये नमः (पादयोः)। क्रीं कीलकाय नमः (नाभौ)। विनियोगाय नमः (सर्वाङ्गेषु)।

करन्यासः - ओं क्रां अंगुष्ठाभ्यां नमः। ओं क्रीं तर्जनीभ्यां नमः।ओं क्रूं मध्यमाभ्यां नमः। ओं क्रैं अनामिकाभ्यां नमः। ओं क्रौं कनिष्ठिकाभ्यां नमः। ओं क्रः करतल करपृष्ठाभ्यां नमः।

अङ्गन्यासः - ओं क्रूं हृदयाय नमः। ओं क्रीं शिरसे स्वाहा। ओं क्रूं शिखायै वषट्। ओं क्रैं कवचाय हुम्। ओं क्रौं नेत्रत्रयाय वौषट्। ओं क्रः अस्त्राय फट्।

भूर्भुवस्सुवरोम् (इति दिग्बन्धः)।

ध्यानम्–

करालवदनां घोरां मुक्तकेशीं चतुर्भुजाम्।
कालिकां दक्षिणां दिव्यां मुण्डमालाविभूषिताम्॥ १७ ॥

सद्यश्छिन्नशिरः खड्गवामोर्ध्वाधःकराम्बुजाम्।
अभयं वरदं चैव दक्षिणाधोर्ध्वपाणिकाम्॥ १८ ॥

